10th August 1960]

SRI S. M. ANNAMALAI: சென்ற ஆண்டு இதே நேரத்தில் புளி, மிளகாய் விலை எவ்வளவு இருந்தது? இப்பொழுது விலை எவ்வளவு இருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU: தகவல் வேண்டுமானுல் தனியாகக் கேள்வி போடவேண்டும். புளி, மிளகாய் இவைகளை எவ்வளவுக்கெவ்வளவு குறைக்கிறேமோ அவ்வளவுக்கவ்வளவு உடம்புக்கு நல்லது என்று சொல்வார்கள்.

SRI V. SANKARAN: மத்திய சர்க்காருடைய பதிலிலே, தற்போதுள்ள ஏற்றுமதிக் கொள்கையிலே எந்தவித மாறுதலும் தேவையில்லை என்று இருப்பதாகச் சொல்லப்பட்டது. தற்போதுள்ள மத்திய சர்க்காரின் ஏற்றுமதிக் கொள்கை என்ன என்பதை விவரமாக எடுத்துச் சொல்ல முடியுமா?

MR. SPEAKER: The hon Member must put a separate question.

SRI S. LAZAR: Is the Government aware that the prices of certain other goods like tannery goods are going very high and will this Government recommend to the Union Government to ban the export of these also?

THE HON. SRI M. A. MANICKAVELU: This morning I am concerned only with chillies and tamarind.

SRI V. K. KOTHANDARAMAN: நமது ராஜ்யத்திலிருந்து புளி, மிளகாய் ஏற்றுமதி செய்யக்கூடிய கம்பெனிகள் யாவை என்று சொல்ல முடியுமா?

MR. SPEAKER: தனிக் கேள்வி போட வேண்டும்.

SRI N. R. THIAGARAJAN: ஒரு நாடு முன்னேற வேண்டுமானுல், அந்த நாட்டு மக்களின் தேவையை ஓரளவு குறைத்தாவது வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து பணம் சம்பாதிப்பதை முக்கியமாகக் கருதி, அதே வகையில் புளி, மிளகாய் இவைகளை இலங்கைக்கு ஏற்றுமதி செய்து கொண்டு வந்தோம். அதை மீண்டும் கையாண்டு, அதிகமாக ஏற்றுமதி செய்ய அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அந்த மாதிரி எல்லோரும் புரிந்துகொள்ளவில்லை. அதுதான் கஷ்டம்.

*Housing scheme for industrial workers*

*70 Q.—SRI M. P. SARATHI: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) இந்த ராஜ்ய தொழிலாளர்களுக்கு வீடு அமைப்புத் திட்டத்திற்காக ஆயுள் இன்ஷூரன்சு கார்ப்பொரேஷனிடமிருந்து அரசினர்துறைக்கு கிடைத்த கடன் தொகை எவ்வளவு?

[10th August 1960

(ஆ) ராஜ்ய அரசாங்கம் இத் திட்டத்தின் கீழ் எந்த இடங்களில் எத்தனை வீடுகள் கட்ட முடிந்தது?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) The Life Insurance Corporation of India is not giving any loan to the State Government for construction of tenements for industrial workers.

(b) Does not arise.

*Sugar*

*71 Q.—SRI N. R. THIAGARAJAN: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லாவிற்கு ஒதுக்கப்பட்ட சீனி மூட்டைகள் எத்தனை?

(ஆ) அதில் பெரியகுளம் தாலூகாவிற்கு எத்தனை மூட்டைகள் கொடுக்கப்பட்டன?

(இ) சீனி வாங்கி சில்லறையில் பொதுமக்களுக்கு விற்று பழக்கமில்லாதவர்களுக்கு சீனி பெர்மிட் கொடுக்கப்பட்டதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) 10,000 bags.

(b) 1,200 bags.

(c) No, Sir.

SRI N. R. THIAGARAJAN: "சர்க்கரை" என்ற சொல் தான் இனிப்பாக இருக்கிறதே தவிர, விநியோக விஷயத்தில் இனிப்பாக இல்லை; கசப்பாக இருக்கிறது. நகரவாசிகளுக்கு அதிகமாக விநியோகிக்கப்படுகிறதே தவிர, கிராமவாசிகளுக்குப் பரவலாக விநியோகிக்கப்படவில்லை என்ற புகார் இருக்கிறது. ஆகவே, ஒரு திட்டவட்டமான கொள்கையை வகுத்து, நகரங்களில் பங்கீடு செய்வதைப்போல் கிராமங்களிலும் சரியாகப் பங்கீடு செய்யப்படவேண்டுமென்று சர்க்கார் சரியான உத்தரவு போடுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: திட்டம் போட்டு, எந்த எந்த ஜில்லாவுக்கு எவ்வளவு தேவை இருக்கிறதோ அதைக் கணக்கிலெடுத்து அதற்குத் தகுந்தாற்போல் ஏற்பாடு செய்யப்படுகிறது. இதிலே கஷ்டம் என்னவென்றால், வட நாட்டிலிருந்து சர்க்கரை இங்கு வருவதற்கு ஒரு மாதம் இரண்டு மாதம் ஆகிறது. அதுபற்றி அவர்களுக்குச் சொல்லியிருக்கிறோம். ஒரு மாதம், இரண்டு மாதத்திற்கு முன்பே "லோட்" பண்ணி அனுப்பச் சொல்லியிருப்பதால், இனி காலா காலத்தில் வரும்; அப்பொழுது சரியாகப் போய்விடும்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM: மதுரை நகரைப் பொறுத்தவரையில், அங்கு விசேஷ காலங்களிலும் மற்ற காலங்களிலும் சர்க்கரை வேண்டியிருந்தால், தாசில்தாரோ, ரெவின்யூ